REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: புரட்டாசி 24உ செவ்வாய் (9—10—56) ★ ★ வெளியூர்: புரட்டாசி 25உ புதன் (10—10—56) [இதழ் 103

## கேரளத்தில் சுற்றுச் சுவர் அற்ற 'சிறை'

★

திருவனந்தபுரம், அக். 9—

சுற்றுச்சுவர் இல்லாச் 'சிறை' ஒன்று கேரளத்தில் அமைய விருக்கிறது. ரூ. ஒரு இலட்சம் இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

திருச்சூர் அருகே இந்த நவீன திறந்த 'சிறை' அமையும்.

துவக்கத்தில் 50 கைதிகள்—நன்னடத்தையுடையவர்கள் இச்சிறையில் அடைக்கப்படுவோர்கள்.

சிறையில் ஒரு பால் பண்ணை, ஒரு ஆடு வளர்க்கும் பண்ணை முதலியனவும் துவக்கப்படும் என்று செய்தியொன்று தரப்பட்டுள்ளது.

# நேரு—பெரியார் சந்திப்பு

## காமராசர் ஏற்பாடு செய்வார்

## தேர்தலுக்கு முன்பு இந்த ஏற்பாடு நடைபெறும்

## தாராசிங் தகராறு தீர்க்கப்பட்டதுபோல இது!

### காங்கிரஸ் வட்டாரத்தில் கருத்து அலை

### பெரியாரின் சுயமரியாதை இயக்கத்துக்கு பண்டித நேருவின் ஆதரவு

நேருவின் ஆட்சிக்குப் பெரியாரின் சம்மதம்

### இம்முறையில் 'சமரசம்' உருவாகுமாம்

நேருவும் பெரியாரும் சந்திக்கப் போகிறார்கள்.

காமராசர் இதற்கான ஏற்பாடு செய்யப்போகிறார்.

'இந்தச் சந்திப்பு, போதுத் தேர்தலுக்கு முன்பு நடைபெறப் போகிறது'—என்று காங்கிரஸ் வட்டாரத்தில் காமராசர் ஆதரவாளர் மத்தியில் பேசிக்கொள்ளப்படுகிறது.

பஞ்சாபில், சீக்கியரின் மாபெருந் தலைவர் தாராசிங், கிளர்ச்சிகள் செய்தபடி இருந்ததால், பஞ்சாபில் காங்கிரஸ் குன்றிக்கிடந்தது; சீக்கியரின் பாதுகாப்பு அமைப்பான அகாலிதளம், காங்கிரசின் செல்வாக்கை ஒடுக்கி வைத்திருந்தது.

இப்போது, நேரு பண்டிதரின் இராஜதந்திரம் பலன் அளித்திருக்கிறது.

நேரு பண்டிதர் தாராசிங்கைச் சந்தித்துப் பேசி, அவருடைய கோரிக்கைகளுக்குத் தார்மீக ஆதரவு தருவதாக இசைந்ததாகவும், அதனால் மனமகிழ்ந்து தாராசிங், இனி அகாலிகள் காங்கிரசில் சேரலாம் என்று முடிவு செய்ததாகவும் வெளியான 'செய்தி', இங்குள்ள காங்கிரஸ் வட்டாரத்தில்புதிய எண்ணத்தை உண்டாக்கி வைத்திருக்கிறது.

பெரியார்—நேரு சந்திப்பு பொதுத் தேர்தலுக்கு முன்பு ஏற்பாடானால், காங்கிரசின் வெற்றி வாய்ப்பு வலுவடையும் என்று காங்கிரஸ் வட்டாரம் கருதுகிறது.

பெரியாரின் சுயமரியாதைக் கொள்கைக்கு நேரு பண்டிதர் தம் தார்மீக ஆதரவைத் தருவது என்றும், அதன் பயனாகப் பெரியார் தாம் காங்கிரசை எதிர்ப்பவராக இருந்துவரும் நிலையை மாற்றிக்கொள்வது என்றும்—ஏற்பாடு உருவாகவேண்டும் என்று காங்கிரஸ் வட்டாரம் பேசிக்கொள்கிறது.

இதற்கான திட்டம் காமராசரிடம் இருப்பதாகவும், இந்தச் சந்திப்புக்கான காலம் இப்போது விரைந்து வந்துகொண்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

## பொதுத் தேர்தலும் கம்யூனிஸ்டு கட்சியும்

இராமமூர்த்தி தரும் விளக்கம்

சென்னை, அக். 8—

இந்திய கம்யூனிஸ்டு கட்சியின் தமிழ் நாடு கிளையினர் வரப்போகும் பொதுத் தேர்தலில் 205 பேர் இடம் கொண்ட சென்னை சட்டசபைக்கு, 50 இடங்களுக்கு மட்டும் போட்டியிடுவதென முடிவு செய்திருப்பதாக அக்கட்சித் தலைவர்களுள் ஒருவரான பி. ராமமூர்த்தி தெரிவித்திருக்கிறார்.

குறைந்தது 10 இடங்களில் பி. சோ. கட்சியினருக்கு ஆதரவாக வேலை செய்யவும், பல தொகுதிகளில் சுயேச்சைகளுக்கு வேலை செய்யவும் கம்யூனிஸ்டு கட்சி உத்தேசித்திருப்பதாகவும் அந்தத் தலைவர் கூறியிருக்கிறார்.

"தி. மு. கழகம் போன்ற 'வகுப்புவாதக் கட்சி'களுடன் எந்தவிதத் தொடர்பும் வைத்துக் கொள்ளப் போவதில்லை" என்றும் அந்தஇராமமூர்த்தி அய்யர் கழகத்தை அவதூறு செய்யும் வகையில் பேசினாராம்.

## 56 நாட்களாக

நடைபெற்ற வேலைநிறுத்தம்

வெற்றியுடன் முடிந்தது

எர்ணாகுளம், அக். 8—

ஆல்வாயிலுள்ள 'இந்தியன் அலுமினியம் கம்பெனி' தொழிலாளர்கள் சுமார் 700 பேர் கடந்த 56 நாட்களாக நடத்திவந்த வேலைநிறுத்தத்தை— கோரிக்கைகளுக்கான தகராறில் சமரசம் ஏற்பட்டதை ஒட்டி—முடித்துவிடத் தீர்மானித்திருக்கின்றனர் எனத் தெரிய வருகிறது.

தொழிலாளர்களுக்கு 1955—56-ம் ஆண்டுக்கு, சம்பளத்தில் 14 சதவிகிதம் போனசாகத் தர நிர்வாகம் சம்மதித்ததாம்; ஆனால் தொழிலாளர்கள் நிபந்தனையின்றி வேலைநிறுத்தத்தைக் கைவிடவேண்டும் என்று கூறப்பட்டதாம்; தொழிலாளர் சங்கத்தவர் இதனை ஏற்றுக் கொண்டதாகத் தெரியவருகிறது.

## பள்ளி ஆசிரியர்கள் உண்ணாவிரதம்

5 மாதம் சம்பளம் இல்லாமல் உழைத்தனராம்

வாரங்கல், அக். 5—

நரசிம்லாபட் கிராமத்தில் உள்ள ஓர் ஆரம்பப் பள்ளியில் வேலை செய்யும் நான்கு ஆசிரியர்களுக்குக் கடந்த ஐந்து மாத காலமாகச் சம்பளம் தரப்படவில்லையாம். இந்த விஷயத்தைக் கல்வி அமைச்சருக்கும் அறிவித்தனராம். எனவே சென்ற 2-ம் தேதியில் இருந்து அந்த ஆசிரியர்கள் உண்ணாவிரதம் மேற்கொண்டுள்ளனராம்.

## கிருஷ்ணமாச்சாரி

மீண்டும் போட்டியிடுவார்

கோவை, அக். 8—

வரும் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகராகத் தாம் போட்டியிடப் போவதை, இங்கு வர்த்தக சங்கத்தில் பேசுகையில் டி. டி. கே. அறிவித்தார்.

## நிதி மந்திரிக்குக் கருப்புத் துணி பரிசு!

### 'எல்லைப் பிரச்சினை என்னவாயிற்று?'

### கேள்விக் கணை தொடுத்தனர் கூட்டத்தினர்

கேள்வி கேட்டோரை போலீசார் அப்புறப்படுத்தினராம்

சென்னை, அக். 8—

நிதி மந்திரி சுப்பிரமணியம் அவர்கள் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசிக்கொண்டிருக்கும்போது, அவரிடம் கருப்புக் கொடி ஒன்று தரப்பட்டிருக்கிறது.

பெத்தநாயக்கன் பேட்டையில் நடைபெற்ற அந்தக் கூட்டத்தில் அவர், எதிர்க் கட்சிகளைப் பற்றிச் சரமாரியாகத் தாக்குதல்களைத் தொடுத்துக் கொண்டிருந்தபோது, தமிழரசுக் கழகத்தைச் சார்ந்தவர் என்று கூறப்படும் ஒரு தோழர் எழுந்து நின்று, 'இதெல்லாம் இருக்கட்டும்; எல்லைப் பிரச்சினை என்னவாயிற்று?' என்று கேள்வி எழுப்பிவிட்டு, மேடையருகே சென்று, பேசிக்கொண்டிருந்த மந்திரியிடம் கருப்புத் துணி ஒன்றைத் தந்திருக்கிறார்.

இதைத் தொடர்ந்து காங்கிரஸ் ஊழியர்கள் அந்தத் தோழரைப் பிடித்துக் கொள்ளவே, கூட்டத்திலிருந்த வேறு சிலரும்—தமிழரசுக் கழகத்தவர் என்றே கூறப்படுகிறது—எழுந்து, கேள்விக்குப் பதிலளிக்குமாறு கேட்க முற்பட்டிருக்கின்றனர்.

உடனே, கூட்டத்திற்கு வந்திருந்த போலீஸ் அதிகாரிகள் அவர்களை எல்லாம் பிடித்து, கூட்டத்திற்கு வெளியே இழுத்துச் சென்றுவிட்டனர் என்று தெரிய வருகிறது.

பின்னர் மந்திரி அத்துடன் கூட்டத்தை முடித்துக் கொண்டதாகவும் தெரிய வருகிறது.

## மலேயா, சிங்கப்பூரில் 'திராவிட நாடு' இதழ் தடை நீக்கம்?

என்ன காரணத்திற்கோ?

பீகிங், அக். 8—

அடுத்த மூன்று ஆண்டுகளில் கம்யூனிஸ்டு சீனா, நேபாளத்திற்கு ரூ. 6 கோடி பொருளாதார உதவியளிக்குமாம். நேபாளம் தன் விருப்பப்படி இந்த பணத்தைச் செலவிடலாம் என்று தெரிகிறது.

### நடிப்பிசை புலவர் இராமசாமி முயற்சி

### முதலமைச்சர்களைப் பேட்டி கண்டு நியாயம் கோரினார்

சென்னை, அக். 8—

சென்ற திங்களில் நடிப்பு-இசைப் புலவர் கே. ஆர். இராமசாமி தன்னுடைய நாடகக் குழுவுடன், அண்ணா அவர்களின் கருத்துக் குவியல்களை நாடக வாயிலாக மலேயா, சிங்கப்பூர் மக்களுக்கு அளிக்கச் சென்றார்; அங்கு 50-க்கு மேற்பட்ட நாடகங்களை வெற்றிகரமாக நடத்தியுள்ளார்.

அண்ணா அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் 'திராவிட நாடு' வார இதழ், மலேயாவில் கம்யூனிஸ்டு ஏடாகக் கருதப்பட்டு, அந்த அரசாங்கத்தால் தடை விதிக்கப்பட்டுள்ளது. எனவே, அந்தத் தடையை நீக்குவதற்கு நடிப்பு-இசைப் புலவர் தக்க முயற்சி எடுத்துள்ளார். அந்த நாட்டு முதலமைச்சரும் தடையை நீக்குவதாக வாக்களித்தார்

சென்ற 29—9—56 அன்று சிங்கப்பூர் தி. மு. கழகச் செயலாளர் சிங்காரவேலன், துணைச் செயலாளர் கே. எ. நாகராசன், நிர்வாகக் குழு உறுப்பினர் பி. சோமசுந்தரம் ஆகியோருடன் நடிப்பு-இசைப் புலவர் கே. ஆர். இராமசாமி அவர்கள் சிங்கப்பூர் முதலமைச்சர் லிம்-யூ-ஹாக் அவர்களைச் சந்தித்து, 'திராவிட நாடு' இதழ் மீது உள்ள தடையை நீக்குமாறு வேண்டிக்கொண்டார்.

சிங்கப்பூர் சட்டசபை கூடும் சமயத்தில் எழுத்து மூலம் தம்முன்னை இந்தக் கோரிக்கை கவனிக்கப்படுமென்று தெரிகிறது.

அந்தக் கோரிக்கையில் அண்ணாவின் 'திராவிட நாடு' இதழும், திராவிட முன்னேற்றக் கழகமும், கம்யூனிஸ்டுக் கட்சியுடன் தொடர்பு கொண்டதல்ல என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார் நமது நடிப்பு-இசைப் புலவர்.

### மலேயாவில்:

மலேயா முதல் அமைச்சரான தெங்கு அப்துல் ரெஹ்மான் அவர்களையும் இராமசாமி அவர்கள் பேட்டி கண்டு, திராவிட நாடு இதழுக்கு விதிக்கப்பட்டுள்ள தடையை நீக்கவேண்டுமென்று தகுந்த காரணங்களைக் கூறிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

முதலமைச்சர் ரெஹ்மானும், தடை நீக்கம் பற்றிப் பரிசீலித்து முடிவு சொல்வதாக உறுதியளித்திருக்கிறார் எனத் தெரிய வருகிறது.

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## ஆய்வுக்குழு தங்கும் இடங்கள்

★

| | |
|---|---|
| காஞ்சிபுரம் .... | நகராட்சி தங்கும் விடுதி (இரயில்வே ரோடு அருகில்) |
| வேலூர் .... | டவுன் ஹால் |
| திருப்பத்தூர் .... | 58, சின்னக்கடை வீதி |
| சேலம் .... | பிரபாத் டாக்கீஸ் |
| நாகர்கோயில் .... | நாஞ்சில் மாவட்ட தி. மு. கழக அலுவலகம் |
| கடலூர் N. T. .... | முசாபரி பங்களா |

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

நம் நாடு
தி. மு. க. தினஇதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 9-10-'56 செவ்வாய்

# இது என்ன பற்று?

பதினன்கு தேசிய மொழிகளில் ஒன்ருக வடமொழியையும் இந்திய அரசியல் சட்டம் ஒப்புக்கொண்டு இருக்கிறது. அம்மொழியைப் பேசுகின்றவர்கள் ஏறத்தாழ ஆறுயிரம் பேர்களுக்குமேல் கிடையாது என அரசாங்கப் புள்ளி விவரமே கூறுகிறது. இம்மொழி இவ்வளவு குறைந்த எண்ணிக்கையினரால் பேசப்பட்ட போதிலும்கூட, அதையும் மற்ற மொழிகளுடன் தேசிய மொழி என ஏற்றுக்கொண்டிருக்கிறது இந்தியப் பேரரசு.

வடமொழிக்கு இந்த வாய்ப்புத் தரப்பட்டிருப்பதற்கு, அம்மொழியினல் மக்கள் பெறும் பயனைப் பொருட்டாகக் கொண்டு ஒருக்காலும் தந்திருக்க முடியாது. அவ்வாறு இந்தியப் பேரரசு கூறவுமில்லை.

அம்மொழியின் பழமையை கருதியும், அம்மொழிமீது ஏற்றி வைக்கப்பட்டுள்ள தெய்வீகத் தன்மையை ஒப்பியுமே, தேசிய மொழி இடத்தை அதற்குக் கொடுத்திருக்க முடியும் என நாமாக யூகித்துக் கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. இந்தியப் பேரரசின் ஒப்புதலுக்கு அதுவே மூலகாரணம் என்பதற்கு மறுப்பும் இருக்க முடியாது.

ஆத்மீக அறிவுக்கும் வடமொழி எனும் சவமொழிக்கும் மற்ற உலக மொழிகளுக்கு இல்லாத அளவில் நெருங்கியத் தொடர்பு இருப்பதாக, அம்மொழிக் காதலர்கள் தொன்று தொட்டுப் பறையடித்த வண்ணம் உள்ளனர். இப்போலி வாதத்தையே, மேல் நாட்டு நாகரீகத்தைப் பழிப்பதற்கும், தங்கள் அநாகரிகத்தை உயர்த்திக் கூறிக்கொள்வதற்கும் வடமொழிப் பற்றுடையவர்கள் ஒருபெரும் பலமாகக் கொள்ளுகின்றனர்.

வடமொழியின் தன்மை எத்தகையதாக இருந்த போதிலும், பெரும் எண்ணிக்கையினரான பொதுமக்களுக்கும் அம்மொழிக்கும், தினசரி வாழ்க்கையில் ஒரு மொழிக்கு இருந்துத் தீரவேண்டிய எந்தவிதத் தொடர்பும், என்றும் அம்மொழிக்கு இருந்ததில்லை என்ற உண்மை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள ஒன்ருகும். அம்மொழி வெறியர்களும் கூட இவ்வுண்மையை இதுவரை மறுத்தது கிடையாது.

தான் பெற்றக் குழந்தை கொண்டி முடமானலும், பொட்டைக் கண்ணனலும் அதை அழகோவியம் என்று பெற்றத் தாய் புகழ்ந்து கூறுவது போன்றே, காதொடிந்த ஊசியளவும் மக்களுக்குப் பயனளித்திடும் பண்பு இல்லாத வடமொழியை, அம்மொழிக் காதலர்கள், ஏற்றிப் போற்றிப் பேசி வருகின்றனர் அவ்வாறு பாராட்டிப் பேசுவது, அம்மொழிக் காதலர்களுக்கு ஒரு கொடிய தொத்து நோயாகவும் போய்விட்டது.

அம்மொழி என்றும் இம்மண்ணில் ஆட்சிமொழியாக இருந்திருக்கவில்லை என்றாலும், அது அரண்மனையின் நல்லாதரவுடன் 'தேவாலயங்க'ளில் வளர்ந்துவந்த மொழியாகவே இருந்து வந்திருக்கிறது. பார்ப்பனச் சேரியின் நித்திய கீதமாக, முன்பு ஒரு காலத்தில் அம்மொழி இருந்தது. இன்ருே, அம்மொழி, அதன் பிறப்பிடம் எனப் பொருத்தமாகவோ பொருத்தமில்லாமலோ கூறப்படும் அச்சேரியிலும் இடம் கிடைக்கப் பெருது திண்டாடுகிறது.

பெருந்தொகையினரான மக்களுக்கும் வடமொழிக்கும், நித்திய வாழ்வில் அணுவளவுத் தொடர்பும் கிடையாது என்பதை ஏற்கனவே குறிப்பிட்டோம். அந்தப் பயனற்றத் தன்மைதான், அம்மொழியின் படுபாதாள வீழ்ச்சிக்குக் காரணம் என்பதை அனைவரும் ஒப்புக்கொண்டே ஆகவேண்டும்.

வாழ்க்கைத் துறை எதற்கும் பயன்படாத ஒரு மொழியை, மக்கள் என்றும் உடும்புப் பிடியாகக் கட்டியழுவார்கள் என எதிர்பார்ப்பது ஏமாற்றத்தில் தான் இறுதியில் முடிவுபெறும். அந்தப் பொதுவிதிப்படி வடமொழியும் குழிப்பிணமாகி விட்டது. அதைத்தோண்டி எடுத்து மற்ற மொழிகளின் நிலைக்கு உயர்த்தி, அப்பிணமொழியைப் பொதுமக்களுடன் பேசவைக்க முயற்சிக்கிறது இந்தியப் பேரரசு.

அப்பிண மொழியைப் பொதுமக்கள் விரும்பிக் கற்கும் வகையில், எப்படி எப்படிப் பயிற்சியை வகுப்பது, பாடத் திட்டங்களை எவ்வாறு அமைப்பது என்பவற்றைக் குறித்து ஆராய்ந்து அறிந்து ஆலோசனை கூறும்படி ஒரு குழுவை நியமித்திருக்கிறது இந்தியப் பேரரசு. ஆனல் அக்குழுவில், உத்திரப்பிரதேசத்தாரும், பீகார் நாட்டவரும் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டிருக்கவில்லை.

அவ்விரு மாகாணத்தவரும் நியமிக்கப்படக் கூடாது என்ற எண்ணத்தில் வேண்டுமென்றே இந்தியப் பேரரசு, அவ்விரண்டு மாகாணத்தையும் ஒதுக்கி இருக்க நியாயம் கிடையாது. அதற்கு ஏதாவது நியாயம் இருக்குமானல், அனைத்திலும் வடநாட்டவரே ஆதிக்கம செலுத்துகின்றனர் எனத் தென்னகத்தில் புயலெனச் சீறும் குற்றச்சாட்டை இவ்வொன்றின் மூலமாகவாவது, அதாவது பீகாருக்கும் உத்தர பிரதேசத்திற்கும் இக்குழுவில் இடமளிக்காது இருப்பதின் மூலமாகவாவது, பொய்யென மெய்ப்பித்து விடமுடியும் என்ற நப்பாசையில் இந்தியப்பேரரசு இவ்வாறு செய்திருக்கக்கூடும். இந்தியப் பேரரசின் செயலில் மறைந்து கிடக்கும் இம்மகத்தான உண்மையைத் தெரிந்துகொள்ளாது, பீகார் — உத்திரப் பிரதேசத்தைச் சேர்ந்தவர்களை நியமிக்காததினல், 'மக்களின் பொது நம்பிக்கையை இக்குழு பெறத் தவறிவிட்டது' என்று உத்திரப் பிரதேச முதலமைச்சர் டாக்டர் சம்பூர்ணனந்தர் ஒப்பாரி வைக்கக் கிளம்பி இருக்கிருர்.

காசியில் இயங்கிவரும் வடமொழிக் கல்லூரியைச் சுட்டிக் காட்டி, 'கடந்த நூற்றைம்பது ஆண்டுகாலமாக வடமொழியை வளர்த்து, பல்கலைக் கழகமாக ஆக்கம் பெற இருக்கும் காசியை மறந்துவிடுவதா?' எனக் கேள்விக்கணைத் தொடுத்திருக்கிருர் அந்த முதலமைச்சர்.

இதுபோன்று தென்னட்டிலிருந்து குரல் கிளம்புமானல், அதைக் குறுகிய பான்மையைப் பற்று என்பர், கடைந்தெடுத்த மொழி வெறி என்பர், வகுப்புவாதத்திற்குச் சிறந்த எடுதுக் காட்டு என்பர், பரந்த இந்திய மனப்பாங்கிற்குக் கேடு விளைவிக்கக் கூடியது என்பர் — காங்கிரஸ்கனவான்கள்; தேசிய ஏடுகளும் அதற்குப் பல்லவி பாடும்.

ஆனல், உத்திர பிரதேசத்து முதலமைச்சர் 'என் எங்களை வடமொழி ஆய்வுக் குழுவில் சேர்க்கவில்லை'? எனக் கோபமாகக் கேட்பது கண்டும், அதுபற்றிக் குறைபடுவோரைக் காணேம். குறைபடுவோர் இருக்கப் போவதில்லை!

இது என்ன பற்று எனக் கேட்பதுடன் நாம் திருப்தி கொள்ள வேண்டியதுதான்.

## புகழ்ச்சியில் மயங்கும் நேருவுக்கு

பண்டாரநாயகா புகழ் மாலை

கொழும்பு, அக். 6—

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் கௌரவமளிக்கும் முறையில், இலங்கையில் வாழும் இந்தியர் பிரஜா உரிமை தகராறினைத் தீர்க்க தாம் விரும்புவதாக இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா கூறினராம்.

மேலும் அவர் பேசுகையில் ஐரோப்பிய நாகரீகத்திற்கு கிரேக்க நாடு வழிகாட்டுவதைப்போல ஆசிய நாடுகளுக்கு இந்தியா இருந்து வருகிறது என்றும் கூறினராம்.

நேரு போன்ற ஒரு பெரிய மகானை—விவேகம் நிறைந்த ராஜதந்திரியை பிரதமராக பெற்றுள்ள இந்தியா அதிர்ஷ்டசாலியான தேசமாம்!

இப்படி இலங்கை—இந்தியா பிரச்சினையைக் குறித்துப் பேசுகையில் நேருவுக்கு இலங்கைப் பிரதமர் பாராட்டுத் தெரிவித்தார்.

# ஆண்டிகள் மடம் கட்டும் கதையா?

## பேச்சிலே பரிகாரந்தேடும் அதிசயம்

## ஏராள அரிசி, கோதுமை இறக்குமதியாகுமாம்

மக்களுக்கு தேவையான உணவு இருப்பு இருக்கிறதாம்

பாட்னு, அக். 8—

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 55 இலட்சம் டன் கோதுமையும், 35 இலட்சம் டன் அரிசியும் இந்திய அரசாங்கம் இறக்குமதி செய்யுமாம்; இவை நியாய விலைக் கடைகள் மூலம் விற்கப்படுமாம்.

இந்தியாவிற்குத் தேவையான உணவுப் பொருள்களை, வெளிநாடுகளில் இருந்து விலைக்கு வாங்கியே மக்களின் தேவையைப் பூர்த்தி செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது. இந்தியாவின் சுயதேவைப் பூர்த்தித் திட்டத்தின் இலட்சணத்தை, அரசாங்கம் அரிசி கோதுமை முதலிய உணவுப் பொருள்களுக்காக இதர நாடுகளுடன் செய்துகொண்டுள்ள ஒப்பந்தங்கள் அம்பலமாக்குகின்றன.

5 ஆண்டுகளில் பர்மாவில் இருந்து 20 இலட்சம் டன் அரிசியும், அமெரிக்காவில் இருந்து 2 இலட்சம் டன் அரிசியும் இறக்குமதி செய்ய ஏற்பாடாகியிருக்கிறதாம்.

சீனவில் இருந்து 60,000 டன் அரிசி தருவிக்கப்படுகிறதாம்.

கோதுமை இறக்குமதிக்கு அமெரிக்கா, ஆஸ்திரேலியாவுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டுள்ளதாம்.

பர்மா, அமெரிக்காவுடன் இந்திய அரசாங்கம் செய்துகொண்டுள்ள ஒப்பந்தம் இதுவரை வேறு எந்த நாடும் செய்துகொள்ளாத அளவிற்கு விரிவானது—மிகப் பெரியது என்று இந்திய அரசாங்க உணவு அமைச்சர் ஜெயின் இங்கு நடைபெற்ற கிருபர் மாநாட்டில் அறிவித்தார்.

அதே சமயம் 10 இலட்சம் டன் அரிசியும், 10 இலட்சம்டன் கோதுமையும்சேமித்துவைக்க முடிவுசெய்துள்ளனராம். இந்த ஆண்டு அரிசி புஞ்செய் தானியப் பயிர்கள் விளைச்சல் நன்ருக இருக்கிறதாம். அதிலும் தென்னட்டில் பிரமாதமாகயிருக்கிறதாம்.

உள்நாட்டுத் தேவைக்கு மட்டுமின்றி, அந்நியச் செலாவணிக்கு ஏற்றுமதி செய்வதற்கும் உற்பத்தியை அதிகரிப்பதைத்தான் இந்திய அரசாங்கம் கொள்கையாக ஏற்று வருகிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

# 'இந்தியா என்றுமே ஒன்ருக இருந்ததில்லை'

## 'இன்று அரசியல் ரீதியாக மட்டுமே ஒன்றுபட்டுள்ளது'

## மேலும் ஒருமுறை உண்மையை ஒப்புகிருர் நேரு

புதுடில்லி, அக். 9—

'இந்தியா, இப்போதன்றி வேறெப்போதும் ஒன்ருக இருந்தது இல்லை. இப்போதுகூட அரசியல் ரீதியாக ஒன்றுபட்டிருக்கிறதேயன்றி வேறெந்த துறையாலும் ஒன்றுபட்டில்லை' என்ற உண்மையைப் பண்டித நேரு மேலும் ஒருமுறை ஒப்புக்கொண்டிருக்கிருர்.

இந்தியா, தனது வரலாற்றிலேயே முதன்முறையாகஇப்போதுதான் அரசியல் ரீதியாக ஒன்றுபட்டிருக்கிறது. இன்னும் இரண்டு மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள், இந்தியாவின் உருவையே மாற்றிவிடுவனவாகும் என்று பண்டிதநேரு புதுடில்லியையடுத்த கிராமம் ஒனறில் பேசும்போது குறிப்பிட்டிருக்கிருர்.

தொடர்ந்து பேசிய அவர், இந்தியாவிற்குக் கம்யூனிசம் உகந்தது அல்லவென்றும், கம்யூனிஸ்டு வழி, இந்தியப் பிரச்சினைகளுக்குப் பரிகாரம் ஆகாது என்றும அவ்வழி, வர்க்கப் போரினையும் உள்நாட்டுக் குழப்பத்தையுமே தோற்றுவிக்கக் கூடியது என்றும் கூறியிருக்கிருர்.

மேலும் பேசிய அவர் 'இந்து ராஷ்டிரம் வேண்டும்' எனக் கோரும் இந்துமத வகுப்புவாதகக் கட்சிகள் கம்யூனிஸ்டு கட்சியை விட மோசமானவை என்று கூறிவிட்டு, பி. சோ., சோஷலிஸ்டுக் கட்சிகளுக்கும் காங்கிரசுக்கும் அடிப்படை இலட்சியத்தில் வேறுபாடே இல்லை என்றும் கூறினராம்.

### 'பியூனு'க்கு ஆறு மாதத் தண்டனை

நேருவை மிரட்டிக் கடிதம் எழுதினராம்

நாகபுரி, அக். 8—

பண்டித நேருவுக்குப் பயமுறுத்திக் கடிதம் எழுதிய கல்வி இலாகாவில் வேலை செய்யும் ஓர் சேவகனுக்கு ஆறுமாத சிறைத் தண்டனையை நாகபுரி அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி விதித்துள்ளார் என்று தெரிகிறது.

### இந்தியாவிற்கு அமெரிக்கக் கோதுமை

ஆஸ்திரேலியா சலிப்பு!

கான்பெரா, அக் 4—

ஆஸ்திரேலியக் கோதுமைக்கு இந்தியா நல்ல விற்பனை முகாமாக இருப்பதைச் சுட்டிக் காட்டி, இந்தியாவிற்கு அமெரிக்கா அதிகப்படியாகக் கோதுமையை இறக்குமதி செய்திருப்பதைக் கண்டித்து, ஆஸ்திரேலிய வர்த்தக அமைச்சர் சட்டசபையில் குறிப்பிட்டார்.

### பொதுமக்கள் மீது பாரம் போடுகிருர்!

காவேரிப்பாக்கம், அக். 7—

அரசாங்கத்தின் திட்டம் வெற்றி பெற வேண்டுமானல் மந்திரிகள், அதிகாரிகள் மட்டும் பாடுபட்டால் போதாதாம். பொதுமக்கள் பூரண ஒத்துழைப்புத் தந்தால்தான் 2-வது 5 ஆண்டுத் திட்டம் வெற்றிபெறுமாம். இதைச் சென்னை நிதி அமைச்சர் சுப்பிரமணியம் அரக்கோணம் பொதுக்கூட்டத்தில் குறிப்பிட்டார்.

## உலகின் மிகப் பெரிய எண்ணெய்க் கிணறு

கவலை தரும் பிரச்சினையாகிறது

தெஹ்ரான், அக். 8—

தெஹ்ரானிலிருந்து 75 மைல் தொலைவில், குவாம் எனுமிடத்தில் ஒரு எண்ணெய்க்கிணறு.

அதுதான் இன்று உலகிலேயே மிகப் பெரியது.

கடந்த ஆகஸ்டு திங்கள் 26-ந் தேதி காலை மூன்று மணி அளவில் திடீரெனக் கிணற்றிலிருந்து எண்ணெய் மேல் நோக்கிப் பாய ஆரம்பித்ததாம். சுமார் 100 கெஜ உயரத்திற்கு எண்ணெய் பீறிட்டு வழிகிறதாம். இதனைக் கட்டுப்படுத்த, அமெரிக்க எஞ்சினீயர்களாலும் முடியவில்லையாம்.

புதிதான ஒரு கிணறு — நாளொன்றுக்கு 80,000 'பாரல்' எண்ணெய் தரும் கிணறு, இப்படிக் கட்டுப்படுத்த முடியாமல் இருப்பது, கவலை தருவதாக உள்ளதாம். இந்த வேகத்தில் தொடர்ந்து எண்ணெய் வழிய ஆரம்பித்தால், எஃகு கொண்டு கட்டப்பட்டிருக்கும் கிணற்றுச் சுவர் இடிந்து, கிணற்றைப் பாழாக்கிவிடக்கூடும் என்றும் பயம் ஏற்பட்டுள்ளதாம்.

## டில்லியின் 'கல்யாண குண விசேடம்'

'விபீஷணரின் பாஷ்யம்'

கோவை, அக். 8—

இங்கு வர்த்தக சபைக் கூட்டத்தில் இந்திய நிதி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி பேசுகையில், 'சென்னை மாநிலம், மத்திய அரசாங்கத்தால் புறக்கணிக்கப்படமாட்டாது' என்று குறிப்பிட்டாராம்.

தமது மாநிலத்தின் நலனைப் பாதுகாக்கத் தாம் டில்லியில் இருப்பதாகவும், அதனல், சென்னைக்கு ஏராளமான பணம் தரப்படும் என்று அர்த்தமில்லை என்றும் குறிப்பிட்டாராம் அவர்!



# வடவரின் 'பரந்தநோக்கிற்கு' உ. பி. முதன் மந்திரி சான்று பகர்கிருர்

## சவ மொழிக் குழுவில் உ. பி.-க்கு இடம் இல்லாதது வருந்தற்குரியதாம்

புதுடில்லி, அக். 8—

சவமொழிக்குப் புத்துயிர் அளிப்பதற்காக நியமிக்கப்பட்டுள்ள குழு, தனது வேலையைத் துவங்கிவிட்டது என்று தெரிய வருகிறது.

சில கேள்விகளைத் தயாரித்து பலருக்கும் அனுப்பி, குழு கருத்தறியப்போகிறதாம்.

"பல்வேறு காரணங்களுக்காக சர்க்கார் இந்தக் குழுவின் வேலைகளுக்கு மிக முக்கியத்துவம் அளிக்கிறது,"

என்று, டில்லி-சர்க்காருக்குக் கல்வி ஆலோசகரான கே. ஜி. சையதீன் என்பார் கூறியிருக்கிருர்.

குழுவிற்கு டாக்டர் சுனிதி குமார் சட்டர்ஜி என்பார் தலைவர் என்பது தெரிந்ததே.

சவமொழியைப் பரப்புவது எப்படி? சவமொழிக் கல்விக்கான முறை எதுவாயிருக்க வேண்டும்?— என்பவை குறித்து, இந்தக் குழு ஆராய்ச்சி நடத்திச் சிபாரிசுகள் செய்யுமாம்.

### எங்களுக்கு ஏன் பங்கு இல்லை?

'இந்தக் குழுவில் எங்களுக்கு ஏன் பங்கு இல்லை?' என்று உ. பி. முதன் மந்திரி டாக்டர் சம்பூர்ணனந்த் கேட்டிருக்கிருர்.

"மிகத் தொன்மையான காலத்திலிருந்தே சவமொழிக் கல்வி பரப்பும் பல ஊர்களைக் கொண்டிருக்கும் உ. பி., பீகார் மாநிலங்களிலிருந்து, குழுவில் எவரும் இடம் பெருதது ஆச்சரியத்தை அளிக்கிறது,"

என்று அவர் குறைப்பட்டுக் கொண்டாராம்.

"குழு நியமித்ததற்காக டில்லி சர்க்கார் பாராட்டப்பட வேண்டியவர்களே. ஆனல், குழு அமைப்பைக் குறித்து நான் அவர்களைப் பாராட்டுவதற்கு இல்லை. காரணம், உ. பி., பீகாருக்கு அதில் பிரதிநிதித்துவம் இல்லாததே. மேலும், காசி சவமொழிக் கல்லூரி, சீக்கிரமே ஒரு பல்கலைக் கழகமாகவிருக்கிறது. கடந்த 180 ஆண்டுகளாக, சவமொழிப் பயிற்சிக்கு அது வெகுவாகப் பாடுபட்டிருக்கிறது. ஒப்பற்ற வகையில் பணி புரிந்து வரும் அக்கல்லூரி, முழுவதுமாக, இந்தக் குழு அமைப்பின்போது புறக்கணிக்கப்பட்டிருப்பது வருந்தத்தக்குரியது."

என்றும், அவர் புலம்பியிருக்கிருர்.

## பீகார் வெள்ளம்

19,53,000 மக்கள் தவிப்பு

பாட்ன, அக். 8—

பீகாரில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினல் 4 மாவட்டங்களில் சுமார் 2,300 சதுரமைல் பரப்புக்கு வெள்ளக் காடாகியிருக்கிறது.

இதனல் 19,53,000 மக்கள் அவதிப்படுகின்றனர். பயிர் நஷ்டத்தின் மதிப்பு ரூ. 5 கோடி இருக்குமென்று அமைச்சர் சின்ஹா அறிவிக்கிருர்.

### திருவிழாக்களுக்குக் குறைவுக் கட்டண வசதி

இரயில்வேயில் இனி தரப்படமாட்டாது

கோரக்பூர், அக். 7—

ஆங்காங்கே நடைபெறும் 'மேளா'க்களுக்கும், திருவிழாக்களுக்கும் பிரதேச இரயில்வே இலாகாவினர், குறைவுக் கட்டண டிக்கட்டுகள் இனி வழங்கக் கூடாது என இரயில்வே போர்டு உத்திரவிட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டகாலத்தில், பிரயாணிகள் போக்கு-வரத்து அதிகரிக்கவிருக்கிறது என்ற உத்தேசக் கணக்கை ஆதாரமாக வைத்தே இந்த உத்தரவைப் பிறப்பித்திருக்கின்றனர் என்றும் தெரியவருகிறது.

## இழந்ததைப் பெற...!

டோக்கியோ, அக். 7—

ஜப்பான் பிரதமர் ஹடோயாமா, ரஷ்யாவுடன் மீண்டும் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்வதற்காகப் பேச்சு வார்த்தைகள் நடத்துவதற்கென மாஸ்கோ பயணமாகியுள்ளாரெனத் தெரிய வருகிறது.

### பழனி நகராண்மைக் கழகத்தில் அனுதாபம்:

28—9—56 மாலை 4 மணியளவில் பழனி நகராண்மைக் கழகக் கூட்டம், துணைத் தலைவர் எஸ். இராசகோபாலன் தலைமையில் நடைபெற்றது. அதுபோது தி. மு. கழகச் செயலாளரும், நகராண்மைக் கழக உறுப்பினருமான கே. கிருஷ்ணமூர்த்தி கொண்டுவந்த தோழர் கே. வி. கே. சாமி மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானத்தைத் தோழியர் சி. லோகாம்பாள் வழிமொழிய, ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. நகராண்மைக் கழக உறுப்பினர் களனைவரும் இரண்டு நிமிட நேரம் மௌனமாக நின்று மரியாதை செலுத்தினர்.

## நாட்டிய விழா!

நேரு ஒன்றரை மணி நேரம் கண்டார்

புதுடில்லி, அக். 7—

பஞ்சாபி நடனங்கள், கிராமிய நாட்டியங்கள் கொண்ட விழா ஒன்றினை நேரு பண்டிதர் துவக்கி வைத்து, ஒன்றரை மணி நேரம் வரை விழாவைக் கண்டு களித்திருக்கிருர்.

'நான் இங்கே பேசிக் கொண்டிருப்பதின் மூலம், விழாவினைத் தாமதப்படுத்த விரும்பவில்லை' என்று கூறி, 'திரை விலகட்டும்' என்று விழாவைத் துவக்கி வைத்தார்.

# வட நாட்டு முதலாளிகட்கு அடிக்கிறது யோகம்!

## 30 லட்சம் கெசம் துணி தருமாறு பர்மிய சர்க்கார் கேட்கிறது

அகமதாபாத், அக். 8—

30 இலட்சம் கெசம் 'ஷர்ட்' துணி தேவையென பர்மா சர்க்கார் அறிவித்திருக்கிறது.

இந்தியாவில் உள்ள சவுளி ஆலைகளிடம் இதற்காகப் பர்மிய சர்க்கார் விலைப் புள்ளி விவரம் கோரியிருக்கின்றனராம்.

துணி 1956 அக்டோபர் முதல் 1957 மார்ச் திங்களுக்குள் கொடுக்கப்படவேண்டுமாம்.

## புதிய ஆந்திரம்

புதிய ஆந்திரப் பிரதேச மாநிலத்தைப் பண்டித நேரு துவக்கிவைப்பார் என்று தெரிய வருகிறது.

நவம்பர் முதல் தேதி இந்த விழா நடைபெறும். கடந்த 1953ல் ஆந்திர மாநிலம் அமைந்தபோதும் நேருதான் துவக்கிவைத்தார்.

திருவேதியே கவர்னர்

புதிய மாநிலத்தின் கவர்னராகத் திருவேதியே தொடர்ந்து பதவி வகிப்பார்என்றும்தெரியவருகிறது

## சூயஸ் கால்வாயை அகலப்படுத்த நாசர் திட்டம்

சூயஸ் கால்வாயை அகலப்படுத்த எகிப்து தலைவர் நாசர் முடிவு செய்திருக்கிருர் என்ற செய்தி, மேற்கு வல்லரசுகளுக்குச் செர்தேன் விஷமாகியிருக்கிறதாம்.

சுமார் 100 பவுன் செலவில் கால்வாய் அகலப்படுத்தப்படும் என்றும் நாசர், இந்தச் செலவினை, உலக பாங்கியிலிருந்து பெற்றுள்ள கடனிலிருந்து செய்வார் என்றும் கூறப்படுகிறது.

மேலும் அவமானம்!

இந்தச் செய்தியும், நாசர் ஆட்சியின் கீழ் சூயஸ் கால்வாய் நிர்வாகம் நிரம்பவே நடந்துவருகிறது என்ற செய்தியும், ஏற்கனவே மூக்குடைபட்டுள்ள மேற்கு வல்லரசுகளுக்கு, மேலும் அவமானத்தைத் தேடித் தந்துள்ளதாக லண்டன் அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றனவாம்.

கலைப் பொருட்காட்சி

மூன்ருவது சர்வதேச கலைப் பொருட்காட்சி அடுத்த ஆண்டு சனவரியில், அகில இந்திய நுண்கலை கழகத்தாரால் நடத்தப்படும். இதில் 14 நாடுகளுக்குமேல் கலந்து கொள்ளுமாம்.

# கிளர்ச்சி செய்வது குறுகிய நோக்கமாம்!

## எல்லைக்குழு வேண்டுமென கேட்கக்கூடாதாம்!

காங்கிரஸ் செயலாளரின் 'பரந்த நோக்கு'

சென்னை, அக். 6—

எல்லைத் தகராறுகளைத் தீர்க்க தமிழரசுக் கழகம் நடத்தும் கிளர்ச்சி குறுகிய மனப்பான்மை கொண்டதாம்!

புதிய மாநில அமைப்பு முடிந்த பின்னும் — பாராளுமன்றத்தில் அதற்கு ஒப்புதல் பெற்ற பின்னரும், இந்த விஷயத்தில் 'எல்லைக் கமிஷன்' நியமிக்கும் பேச்சே கிடையாது என்றும் காங்கிரஸ் பொதுச்செயலாளர் நாராயணன் தெரிவித்தாராம்.

## நேபாளத்திற்கு செஞ்சீன உதவி!

ரூ. 6 கோடி தர ஒப்பந்தம்!

அடுத்த மூன்ருண்டுகளில் செஞ்சீன, நேபாளத்திற்கு 6 கோடி ரூபாய் வரை உதவுமாம்.

இதற்காக இருநாடுகளிடையேயும் ஒரு பொருளாதார ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறதாம்.

இந்த உதவிக்கு எந்தவித நிபந்தனையும் விதிக்கப்படவில்லை என்றும், இந்தத் தொகையை, நேபாளம் தன் விருப்பப்படி செலவிட்டுக் கொள்ளலாம் என்றும், சர்க்கார் அதிகாரி ஒருவர் கூறியுள்ளாராம்!

# வர்த்தக ரீதியில் பயன்படுத்த விஞ்ஞானப் பரிசோதனைகள்!

இந்திய தேசிய ஆராய்ச்சி அபிவிருத்திக் கார்ப்பரேஷனுக்கு 1956 மார்ச் 31 வரையில், தேசத்திலுள்ள 25 ஆராய்ச்சி நிலையங்கள் 243 ஆராய்ச்சிப் பரிசோதனைகள் பற்றித் தகவல் அறிவித்துள்ளன. தனிப்பட்ட ஆராய்ச்சியாளர்கள் 11 புதிய கண்டுபிடிப்புக்களை அறிவித்திருக்கின்றனர்.

பூனவிலுள்ள தேசிய இரசாயன ஆராய்ச்சிச்சாலைதான் அதிக அளவில் (40) ஆராய்ச்சித் தகவல்களைத் தந்திருக்கிறது; அடுத்தபடியாக பெங்களூர் இந்திய விஞ்ஞானக் கழகம (28), சென்னை மத்திய தோல் ஆராய்ச்சி நிலையம் (17), ஐதராபாத் விஞ்ஞானத் தொழிலாராய்ச்சி மத்திய பரிசோதனை நிலையம் (17) ஆகியவை ஆராய்ச்சிகளை அறிவித்திருக்கின்றன.

கார்ப்பொரேஷன் லைசென்சு வழங்கியுள்ள சில திட்டப்படி ஏற்கனவே உற்பத்தி வேலைகள் நடந்துவருகின்றன. மூங்கில் அட்டைகள், தெர்மோகப்பிளின் அம்மீட்டர்கள், கலப்பு ரக புரொட்டீன் உணவு, ஜிஞ்சர் காக்டெய்ல் ஆகியவை ஏற்கனவே விற்பனைக்கு வந்துவிட்டன. வேறு சில பொருள்கள் சீக்கிரமே மார்க்கெட்டுக்கு வரும்.

புதிய கண்டுபிடிப்புகளையும், வழிமுறைகளையும் மக்களிடையே பிரபலப்படுத்துவதற்காக, நிபுணர்களல்லாத சாமானியரும் புரிந்து கொள்ளக்கூடிய முறையில் தகவல் குறிப்புக்களை சஞ்சிகை வாயிலாகவும், கடிதங்கள் மூலமாகவும் அது தெரிவித்துவரும்; சென்ற வருடத்தில் தொழில் பொருட்காட்சியில் தேசிய ஆராய்ச்சிக் காட்சி அரங்கு ஒன்றையும் அது ஏற்படுத்தியும் இருந்தது.

### 90 கிராம வைத்திய விடுதி

இரண்டாவது ஐந்தாண்டு திட்டக் காலத்தில் ஏற்படும்

செங்கல்பட்டு, அக். 8—

"கிராம வைத்தியசாலைகளில் பல, திருப்தியான முறையில் வேலை செய்யவில்லை; ஆகவே 1956—60 வருடங்களில் 90 கிராம வைத்திய விடுதிகளை அரசாங்கம் ஏற்படுத்தும்,"

என்று, சென்னை அரசாங்க சுகாதார அமைச்சர் ஷெட்டி, செங்கற்பட்டு தலைமை வைத்திய விடுதியைத் திறந்து வைத்துப் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

### அகில இந்தியக் கல்வி மாநாடு

நாகபுரி, அக். 8—

இத்திங்கள் 23-ம் தேதி அகில இந்தியக் கல்வி மாநாடு, காங்கிரஸ் பொதுச்செயலாளர் நாராயணன் தலைமையில் நடைபெறும் எனத் தெரியவருகிறது.

## உடன்பாடில்லை!

வாஷிங்டன், அக். 8—

அணு மூலப் பொருள்களை ஆக்கத் துறைக்குப் பயன்படுத்துவதற்கு மாருக, இராணுவத் துறைக்குப் பயன்படுத்துவதைத் தடுப்பதற்காக அமெரிக்காவுக்கும், ரஷ்யாவுக்கும் உடன்பாடில்லை என்று, இரு நாடுகளுக்கிடையே நடந்த கடிதப் போக்குவரத்துகளிலிருந்து தெரியவருகிறது என்று அமெரிக்க வெளிநாட்டு இலாகா அறிவித்துள்ளது.

### மாதர் சேமிப்புத் திட்டம்

ரூ. 4¾ கோடி வசூல்

புதுடில்லி, அக். 8—

மூன்று ஆண்டுகளுக்கு முன் துவக்கப்பட்ட மாதர் சேமிப்பு இயக்கத்தின் மூலம் ரூ 4·82-கோடி வசூலாகியிருப்பதாக மாதர் ஆலோசனைக் கமிட்டிக் காரியாலய அறிக்கை கூறுகிறது.

******************************

# தேர்தல் ஆய்வுக் குழுச் சுற்றுப்பயணம்

★

| அக்டோபர் | | | அக்டோபர் | | |
|---|---|---|---|---|---|
| 12 : | காஞ்சிபுரம் | .... காலை 9 மணி | 18 : | மதுரை | .... காலை 9 மணி |
| ,, | வேலூர் | .... மாலை 6 ,, | ,, | விருதுநகர் | .... மாலை 6 ,, |
| 13 : | திருப்பத்தூர் | .... காலை 9 ,, | 19 : | திருநெல்வேலி | .... காலை 9 ,, |
| ,, | கிருஷ்ணகிரி | .... மாலை 6 ,, | ,, | நாகர்கோவில் | .... மாலை 6 ,, |
| 14 : | சேலம் | .... காலை 9 ,, | 20 : | | ஓய்வு |
| ,, | ஈரோடு | .... மாலை 6 ,, | 21 : | காரைக்குடி | .... மாலை 6 ,, |
| 15 : | கோயமுத்தூர் | .... காலை 9 ,, | 22 : | பட்டுக்கோட்டை | .... காலை 9 ,, |
| ,, | உடுமலைப்பேட்டை | .... மாலை 6 ,, | ,, | தஞ்சை | பிற்பகல் 3 ,, |
| 16 : | கரூர் | .... காலை 9 ,, | ,, | மாயவரம் | .... மாலை 6 ,, |
| ,, | திருச்சி | .... மாலை 6 ,, | 23 : | கடலூர் | .... காலை 9 ,, |
| 17 : | திண்டுக்கல் | .... காலை 9 ,, | | | |
| ,, | பெரியகுளம் | .... மாலை 6 ,, | | | |

23—10—56 அன்று இரவு சென்னை வந்து சேருவார்கள்

தேர்தல் சூழ்நிலை குறித்து விவரம் தெரிவிக்கக்கூடிய அந்தந்தத் தொகுதியிலுள்ள கிளைக் கழகத் தோழர்களும் ஆதரவாளர்களும், அன்புகூர்ந்து அந்தந்த மாவட்டச் செயலாளர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டுகிறேம்.

'அறிவகம்' சென்னை
23—9—56

—தலைமைக் கழகம் (தி. மு. க.)

******************************

வடக்கெல்லை மீட்பு :

# தமிழரசுக் கழகக் கிளர்ச்சித் திட்டம்

## இரயில் நிறுத்தம் — மறியல் — தடை மீறல்

## மந்திரிகளுக்குக் கருப்புக் கொடி

அக்டோபர் 15-ல் நாடெங்கும் நடத்த முடிவு

சென்னை, அக். 8—

மாநில தமிழரசுக் கழகத்தின் செயற்குழு கூடி; வரும் அக்டோபர் 15-ந் தேதி முதல் வடக்கெல்லை மீட்புப் போராட்டத்தை தகராறுள்ள பகுதிகள் உட்பட தமிழ் நாடு முழுவதும் நடத்துவது என்று முடிவு செய்துள்ளது.

1. மத்திய, மாநில அரசாங்க அலுவலகங்கள் முன் மறியல் செய்வது;
2. அக்டோபர் இறுதியில் நடைபெறவிருக்கும் சட்டசபை முன் ஆர்ப்பாட்டம் நடத்துவது;
3. பிரயாணிகளுக்கு இடையூறு நேராத வகையில் சங்கிலிகளைப் பிடித்திழுத்து இரயில்களை நிறுத்துவது;
4. சென்னை மாநில அமைச்சர்கள், டில்லி அமைச்சர்கள் பொது அலுவல்களில் பங்கு கொள்ள வரும்போது கருப்புக் கொடி காட்டுவது;
5. தடை விதிக்கப்பட்டால் தடையை மீறுவது;

என்ற இந்த ஐந்து திட்டங்கள் தமிழரசுக் கழகத் தொண்டர்களுக்கு அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தத் திட்டங்களை அமைதியான முறையில் நடத்திவைக்குமாறு தமிழரசுக் கழகத் தொண்டர்களையும், அதற்கு முழு ஆதரவு அளிக்க வேண்டுமென்று பொது மக்களையும், கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய தோழர் ம. பொ. சிவஞானம் கேட்டுக்கொண்டார்.

கூட்டத்திற்குப் பின்னர் நிருபர்களிடம் அவர் பேசுகையில், போராட்டம் எத்தனை நாள் நடைபெறும் என்பது பொதுமக்களின் ஆதரவைப் பொறுத்தது என்றும், போராட்டம் துவங்குவதற்கு முன்பு ஆங்காங்குள்ள போலீசுக்கு தகவல்கள் முன்கூட்டியே தரப்படும் என்றும் குறிப்பிட்டார்.

## வறுமையின் கொடுமை !

வியன்னா, அக். 7—

'யுத்த சேவை'யில் ஒரு கையை இழந்த ஓர் முன்னாள் போர்வீரன் நேற்று இங்கு எழுபேர் கொண்ட தன் குடும்பம் முழுவதையும் கோடரியால் கொன்று குவித்து விட்டுத் தானும் தற்கொலை செய்து கொண்ட தகவல் தரப்பட்டுள்ளது.

வறுமையால் வாடிய அந்த முன்னாள் போர் வீரனின் பெயர் பிரான்ஸ் கேபக்; வயது 41.

அவரது குழந்தைகளை அனாதை விடுதிக்கு அனுப்ப அதிகாரிகள் ஏற்பாடு செய்திருந்தனர்; ஆனால், அதற்கு முன்னரே இந்தச் சோகச் சம்பவம் நடைபெற்று விட்டது.

# மேலைநாடுகளின் சூழ்ச்சி பலிக்காது

## மாற்றுத் திட்டம் தருகிறது எகிப்து

நியூயார்க் அக். 8—

சூயஸ் கால்வாயை சர்வதேச நிர்வாகத்துக்கு உட்படுத்துவது என்ற முறையில் பேச்சு நடத்துவது பற்றி பிரான்சும், பிரிட்டனும் ஐ. நா.-வில் அளித்த 5 அம்சங்கள் நிறைந்த திட்டத்தினை எகிப்து நிராகரித்தது.

சூயஸ் பிரச்சினைக்கு அமைதியான முறையில் முடிவு காண ஒரு நிறுவனம் நிறுவ வேண்டும் என்றும், அந்த நிறுவனத்தில் கலந்து கொள்வோரின் எண்ணிக்கையும் நியாயமானதாக இருக்க வேண்டும் என்றும் எகிப்து ஒரு மாற்று யோசனை கூறியிருக்கிறது.

அந்த நிறுவனத்தின் அடிப்படைக் கொள்கை சூயஸ் கால்வாயில் எப்பொழுதும், எல்லோருக்கும் கப்பல் போக்கு - வரத்து சுதந்திரத்தை உத்தரவாதம் செய்ய வழி வகுப்பதே என்றும் எகிப்து குறிப்பிடுகிறது.

செய்தால், பிரிட்டனின் ஆக்கிரமிப்புக்கு அது ஒரு காரணமாகிவிடும்; பிரிட்டனுக்கு விரோதமாக எகிப்து எதுவும் செய்யாதென்பது அவர்களுக்கே தெரியும்" என்று கர்னல் நாசர், டெலிவிஷன் பேட்டி ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

'எப்படி நம்புவது ?'

இந்த டெலிவிஷன் நிகழ்ச்சியை பிரிட்டிஷ் வெளிநாட்டு அமைச்சர் லாயிட் அவர்களுக்குக் காட்டிய போது, தான் அதை நம்பவில்லை என்றும், நாசர் சூயஸ் கால்வாய் கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்ட ஆறு வாரங்களிலேயே உடன்பாட்டை உடைத்தெறிந்தார் என்றும், ஆகவே, வெறும் உறுதிமொழி போதாது—தக்க உத்தரவாதங்களும் வேண்டும் என்றும் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி குறிப்பிட்டுள்ளார்.

★

## ரத்து அதிகாரம் !

ரஷ்யா பயன்படுத்தும் ?

நியூயார்க், அக். 8—

சூயஸ் பற்றிய பிரிட்டிஷ்—பிரெஞ்சு பிரேரணையை நிராகரித்து ரஷ்யா தனது ரத்து அதிகாரத்தை பயன்படுத்தக் கூடுமாம்.

ஐ. நா. பாதுகாப்பு சபை, அதிகாரபூர்வமாக ஒரு கமிட்டியை நியமிக்கும்படி ரஷ்யா கோரியுள்ளது. எகிப்து, இந்தியா, பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா, ரஷ்யா ஆகிய நாடுகள் அந்தக் கமிட்டியில் இடம் பெறவேண்டும் என்றும், பேச்சுவார்த்தை முடிவை ஐ. நா. சபைக்குக் குறிப்பிட்ட காலத்திற்குள் சமர்ப்பிப்பதற்குக் காலவரம்பு நிர்ணயிக்கவேண்டுமென்றும் அவர் யோசனை கூறியுள்ளார்.

★

'தடை செய்யமாட்டேன்'

"பிரிட்டிஷ் கப்பல்களை சூயசில் அனுமதிக்க முடியாதென்று தடை

## தேர்தல்பட்டியல்

இலவசமாகத் தரப்படமாட்டாதாம்

சென்னை, அக். 4—

எந்த அரசியல் கட்சிக்கும் இலவசமாகத் தேர்தல் பட்டியல் தரப்படமாட்டாது என்றும், சென்னை அரசாங்கம் அந்தப் பட்டியல்களுக்கான விலையை நிர்ணயித்துவிட்டது என்றும், அபேட்சகர்களும், அரசியல் கட்சிகளும், ஒரு பக்கத்திற்குக் காலணா வீதம் மூன்று பிரதிகளைப் பெற்றுக்கொள்ளலாம் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஒதுக்கப்பட்ட தொகை வீணாகக்கூடாதே !

தொழில் முன்னேற்றத் திட்டங்களை முன்னிட்டு தொழில் நுணுக்க நிபுணர்கள் பயிற்சிக்கு முதலிடம் தரப்படுமாம்.

அடுத்த ஐந்து ஆண்டுகளில் 5,700 எஞ்சினீயரிங் பட்டதாரிகளையும், 6,800 'டிப்ளமா' பெற்றவர்களையும் உருவாக்குவதற்காக ரூ. 48 கோடி தொழில் கல்விக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

## கழகக் கூட்டம்

சென்னை—

கோமளீஸ்வரன்பேட்டை :

31-வது வட்ட தி. மு கழக 8-வது ஆண்டு துவக்கவிழா சந்திர பானு தெருவில் (சித்ரா டாக்கீஸ் பின்புறம்) 11—10—56 மாலை 6 மணிக்கு

தலைவர் : அ. பொ. அரசு எம். சி.

பேசுவோர் :

ஏ. வி. பி. ஆசைத்தம்பி

ஏ. கே. வில்வம்

அந்தோணி, சு. மாறன்

## திருச்சி மாவட்டத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தேர்தல் ஆய்வுக் குழு

"திருச்சி மாவட்டத்தில் கீழ்க்கண்ட விவரப்படி தேர்தல் ஆய்வுக் குழுக் கூட்டம் நடைபெறும் :—

"கரூர், அரவக்குரிச்சி, குளித்தலை, பஞ்சப்பட்டி தொகுதிகளுக்கு 16—10—56 காலை 9 மணிக்கு—கரூர் வழிப்போக்கர் விடுதியிலும் (Travellers' Bungalow);

"முசிறி, பெரம்பலூர், அரியலூர், ஜெயங்கொண்டம், டி. பழூர், லால்குடி, சீரங்கம், திருச்சிராப்பள்ளி I & II; அந்தநல்லூர், மணப்பாறை, ஆலங்குடி, திருமயம் தொகுதிகளுக்கு 16—10—56 மாலை 4மணிக்கு—திருச்சிமுனிசிபல் சத்திரத்திலும் நடைபெறும்.

"கிளைக்கழகச் செயலாளர்களும், மாவட்டப் பிரதிநிதிகளும், கழக ஆர்வங்கொண்ட பிரமுகர்களும் தவறாது வந்திருந்து தங்கள் கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டுகிறேன்."

—என்று திருச்சி மாவட்ட தி மு கழகச் செயலாளர் அ பெ தர்மலிங்கம் அறிவிக்கிறார்.

## சென்னை பி. & சி. ஆலை தி. மு. க. தோழர்கட்கு :

"தி. மு. கழகத் தேர்தல் நிதி வசூலிக்க ஆங்காங்கே ஆலைத் தோழர்களை ஏற்பாடு செய்திருக்கிறோம். தோழர்கள் அனைவரும் நிதி தந்து ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். 14-10-56 அன்று பகல் 2 மணிக்கு ஸ்டிரான்ஸ் ரோட் திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றப் பணிமனையில், தேர்தல் நிதிக் குழுவின் செயற்குழுக் கூட்டம் நடைபெறும். தோழர்கள் அனைவரும் வசூல் செய்த நிதி முழுவதையும் அக்கூட்டத்தில் சேர்ப்பிக்குமாறும் கேட்டுக்கொள்கிறேன்,"

என்று, பி. அண்ட். சி. ஆலை தி. மு. கழகத் தேர்தல் நிதிக் குழுச் செயலாளர் கே. சுப்பிரமணி அறிவிக்கிறார்.

## மாயூரம் நகர தி.மு.கழகச் செயற்குழுக் கூட்டம்

11—10—56 இரவு 8-15 மணிக்கு தோழர் சா. மீனாட்சிசுந்தரம் அவர்களின் சைக்கிள் கம்பெனியில் மேற்படி கூட்டம் நடைபெறும்.

## மறைவு

ஜோலார்பேட்டை நகரப் பிரமுகரும், பொதுநல ஊழியருமான தோழர் வி. பார்த்தசாரதி அவர்கள் 5—10—56 மாலை சுமார் 7½ மணியளவில் இயற்கை எய்திவிட்டார்.

மறுநாள் மாலை 5½ மணிக்கு நடைபெற்ற சவ ஊர்வலத்தில் ஏராளமான மக்கள் கலந்து கொண்டனர். இடுகாட்டில் 'தோழர் பார்த்தசாரதியின் மறைவு ஜோலார்பேட்டை நகருக்கே ஈடுசெய்ய முடியாத ஒரு இழப்பு ஆகும்' என்று பல கட்சித் தோழர்களும் குறிப்பிட்டுப் பேசினர்.

சர். தியாகராயர் கல்லூரி கட்டிட நிதிக்காக

## சென்னை—வண்ணையம்பதியில் கலைவிழா !

★

9—10—56 : என். எஸ். கிருஷ்ணன் குழுவினரின் 'தளபதி' —தலைவர் : ஏ. நாகப்ப செட்டியார் அவர்கள்.

10—10—56 : சிவாஜி கணேசன் நாடக மன்றத்தின் 'விதி' —தலைவர் : சென்னைமேயர் திரு. இராமநாதன் அவர்கள்.

11—10—56 : எஸ். எஸ். இராசேந்திரன் குழுவினர் நடிக்கும் 'மணிமகுடம்'—தலைவர் : மாவட்ட நீதிபதி திரு. அய்யாசாமி அவர்கள்.

12—10—56 : சாயி — சுப்புலட்சுமி நடனம் — தலைவர் : பொன், வெள்ளி வணிகர் திரு. டி. கோவிந்தராசுலு அவர்கள்.

13—10—56 : புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் நடிக்கும் 'அட்வகேட் அமரன்'—தலைவர் : சென்னை நகரசபை டெபுடி கமிஷனர் திரு. சங்கரன் அவர்கள்.

14—10—56 : புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் நடிக்கும் 'இன்பக்கனவு'—தலைவர் : அண்ணா அவர்கள்.

15—10—56 : சூரிபாபு—இராஜேஸ்வரி குழுவினரின் 'தாரா சசாங்கம்' — தலைவர் : சினிமா புகழ் திரு. என். டி. ராமராவ் அவர்கள்.

நாடகங்கள் நாள்தோறும் மாலை 6-மணிக்கு தியாகராயா கலா மண்டபத்தில் நடைபெறும்

# தமிழ்ச் சங்க வளர்ச்சிக்கு ரூ. 1,000

## புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். அன்பளிப்பு

தாழ்த்தப்பட்டோர் பள்ளிக்கும் ரூ. 1,000 தந்தார் !

மதுரை, அக். 8—

புரட்சி நடிகர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு ஆயிரம் ரூபாயும், கோவில்பட்டி அடுத்த சாந்தமங்கலம் தாழ்த்தப்பட்டோர் பள்ளி நிதிக்காக ஆயிரம் ரூபாயும் அன்பளிப்பு வழங்கியிருக்கிறார் என்ற நற்செய்தி கிடைத்திருக்கிறது.

'மதுரை வீரன்' சினிமா காட்சியின் 180-வது நாள் விழாவினை ஒட்டி மதுரை வந்திருந்த எம். ஜி ஆர். அவர்கள், இந்த அன்பளிப்புகளை வழங்கியிருக்கிறார்

மதுரை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தோழர் எஸ். முத்து அவர்களிடம் இந்தத் தொகையைத் தந்து உரியவர்களிடம் அதனைச் சேர்ப்பிக்குமாறு எம் ஜி ஆர். அவர்கள் கேட்டிருப்பதாகத் தெரிய வருகிறது.

தமிழ்ச் சங்கத்தின் எதிர்கால வேலைத் திட்டத்திற்கு ஒரு கோடி ரூபாய்வரை வேண்டுமென தமிழ்ச் சங்கத் தலைவர் பி. டி. இராசன் அவர்கள் அண்மையில் கேட்டிருந்தது நினைவிருக்கலாம்.

## இப்படியும் ஒரு நிலைமை

புதுடில்லி, அக். 8—

இந்திய அரசாங்கத்தின் உணவு—விவசாய இலாகாவும், கிராமப் புனர் நிர்மாண இலாகாவும் சேர்ந்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்பட்டுள்ள தொகையைப் பயன்படுத்தி, உணவு உற்பத்தியை எவ்வளவு அதிகப்படுத்த முடியும் என்பதை முடிவு செய்துள்ளனவாம்.

கிராமப் புனர் நிர்மாணத் திட்டத்திற்கு ரூ. 200 கோடியும், உணவு - விவசாயத்திற்கு ரூ. 341 கோடியும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

## சென்னை நூலா நகர இளைஞர் கழகம்

10—10—56 மாலை 6½ மணிக்கு பெரம்பூர் பாரக்ஸ், ஸ்டிரான்ஸ் ரோடு நகராண்மைக் கழகப் பள்ளியில் 12-வது சுகாதார வாரம், தோழர் வி. எல். பொன்ராஜ் தலைமையில் நடைபெறும். தோழர் எஸ். பக்கிரிசாமி, மற்றும் பலர் பேசுவர்.

## சொற்பயிற்சிக் கூட்டங்கள்

10—10—56 மாலை 6 மணிக்கு, சென்னை சூளை ஊ. பு. அ. சவுந்திர பாண்டியனார் நினைவுப் படிப்பகத்தில் தோழர் இரா. சேரன் தலைமையில் 'கே. வி. கே. சாமியின் பாதையில் நாம்' எனும் தலைப்பில் தோழர்கள் பலர் பேசுவர்.

* * *

11—10—56 மாலை 6 மணிக்கு, சென்னை 16-வது வட்டம் திருவள்ளுவர் முன்னேற்றக் கழகச் சார்பில் தாண்டவராய பிள்ளை தெரு, எண். 22 இல்லத்தில் தோழர் த. ஆறுமுகம் தலைமையில் 'தேர்தல்' எனும் பொருள் குறித்துத் தோழர்கள் பலர் பேசுவர்.

கல்லூரிக் கட்டிட நிதிக்காக

## நாடகக் கலைவிழா

சென்னை வண்ணையம்பதியில் உள்ள சர். தியாகராயர் கல்லூரியில் விஞ்ஞானத் துறைக் கட்டிட நிதிக்காகக் கடந்த 6-ந் தேதி முதல் நாடகக் கலை விழா ஒன்று நடைபெற்று வருகிறது.

வடசென்னை மக்கள் கலைவிழாவில் மிக்க ஆர்வம் காட்டி சிறப்பித்து வருகின்றனர்.

கல்லூரி செயற்குழுத் தலைவர் திரு. பார்த்தசாரதி (நாயக்கர்) அவர்கள் விழாவின் ஏற்பாடுகளைக் கவனித்து வருகிறார்.

கல்லூரித் தலைவர் பேராசிரியர் சண்முகனார் அவர்களும், மற்றவர்களும் கலை விழா வெற்றி பெறவும், கல்லூரிக்குப் பெரியதோர் நிதி சேர்க்கவும் நல்ல முயற்சிகளைச் செய்து வருகின்றனர்.

தியாகராயர் கல்லூரி இப்போது ஒரு அழகான கலைப் பூங்காவாகத் திகழ்கிறது; தியாகராயர் கல்லூரி ஆசிரியர் க. அறிவழகன் அவர்களும், திரு லிங்கராஜனும் கலை விழாவிற்கான காரியங்களை உடனிருந்து கவனித்து வருகின்றனர்.

கலை விழாவினை வெற்றி பெறச் செய்வதின் மூலம், கல்லூரி மேலும் மேலும் வளர உதவுமாறு சென்னை மக்கள் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றனர்.

## அன்பளிப்பு

சேலம் மாவட்டம் பி. பாப்பாரப்பட்டித் தோழர் கே. பி. தனபால் அவர்கள் 'நம் நாடு' வளர்ச்சிக்கென அனுப்பிய ரூ. 1 வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

